# भगवद्गीता पंचदशोऽध्यायः

# பகவற் கீதை

## 15-வது புருஷோத்தம யோக அத்தியாயம்.

சம்ஸ்கிருதம் - தமிழ் - பத உரை.

## மூர்க்க சதகம்.

சம்ஸ்கிருதம் - தமிழ் - பத உரை.

## நிர்க் குண அஷ்டோத்தர சத நாமாவளி.

சம்ஸ்கிருதம் - தமிழ். — மூன்று நூல்.





ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,
வேதாந்த மடம், திருப் பூவணம்.



காப்பி ரைட்] 1951. [விலை அணா எட்டு.

உ

சிவமயம்.

ஓம் தத் சத்

கிருஷ்ணாய பரப்பிரஹ்மணே நம:

# भगवद्गीता १५ पुरुषोत्तम योगः

# பகவற் கீதை 15வது புருஷோத்தம யோகம்.

## பகவற் கீதை 15-வது பிரபஞ்ச அத்தியாய மூலமும்.

சம்ஸ்கிருத பதமும், தமிழ் உரையும்,
தமிழ்க் கவியும், உரையும்,
மூர்க்க சதகம் மூலமும்,
சம்ஸ்கிருதப் பதமும், தமிழ் உரையும்.

இவை

மண்டலேசுவரரும், பர சமய கோளரியாரும்,
உபய பாஷா வேதாந்த பிரவர்த்தகாச்சாரியரும்,
திரி பாஷா பண்டித மணியும் (மும் மொழிப் புலமை ரத்நமும்),
சத சாஸ்திர கர்த்தரும் (நூறு நூல் இயற்றியவரும்),
திருக் களர், கோவி லூர் மடம்,
ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிக ளவர்கள்
மாணுக்கரும்,
திருப் பூ வணம் வேதாந்த மட ஸ்தாபகரும்
ஆகிய,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் அவர்கள்
இயற்றி,

மதுரை, ராஜேசுவரி பிரசில்,
பதிப்பிக்கப்பட்டன.

காப்பி ரைட்] 1951. [விலை அணா எட்டு.

## பகவற் கீதை பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 17 | 19 | இயைந்தாற் | இயைந்தால் |

## மூர்க்க சதகம் பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 28 | 17 | स्वश्लोघी | स्वश्लाघी |
| 29 | ” | निर्बुद्धः | निर्बुद्धिः |
| 30 | 5 | स्थविर | स्थविरः |
| ” | 24 | अनुशायी | अनुशयी |

---

உ

சிவமயம்.

24-5

# பூமிகை.



ஸ்ரீ வியாச பகவான் நூறாயிரம் கிரந்தத்தில் பாரதத்தினை யியற்றினர். அதன்கண் ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜ்ஜுனனுக்கு ஆத்ம சொரூபத்தினை அநுக்கிரகித்த பகவத் கீதையினை, 700 சுலோக ரூப மாக வைத்தனர். அது சேம னூர் பட்டாரவர்களால் தமிழில் 545 செய்யுள் ரூப மாக மொழி பெயர்க்கப்பட்டது. இக் கீதையின் பெருமை, “எவன் கோர மான ஜநந மரண ரூப சம்சார சமுத்திரத்தினைத் தாண்ட விச்சிக்கின்றனனோ, அவன் கீதை யாகிய தோணியின் மீது ஏறி அநாயாச மாக அதன் கரையினை அடைவன்.”, “புருஷர்களுக்குத் திநந் தோறும் ஸ்நாநம் தேகத்தின் அழுக்கைப் போக்கக் காரண மாம். ஒரு முறை கீதா சாஸ்திரம் ஆகின்ற ஜலத்தின் ஸ்நாநம், ஜநந மரண ரூப சம்சார மலத்தினை நாசஞ் செய்கின்றது.”, “எவ் விடத்தில் கீதையி னுடைய விசாரமும், படித்தலும், படிப்பித்தலும், நடக்கின்றதோ, அந்த இடத்தில் நான் எப்போதும் வசிக்கிறேன்.” என்று, பல பிரகார மாக வராக புராணத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

இதனைப் பிரதி திநமும், பாராயணஞ் செய்யாத மநுடரே இருக்கமாட்டார்கள்; இதனுனே, இதன் பெருமை தெளி வாகப் புலப்படுகின்றது. “இதன் ஒவ் வொரு அத்தியாயத்தினை நா டோறும் பாராயணஞ் செய்யினும், பக்தியுடன் நித்தியம் ஓர் அத்தியாயத்தினைப் படிக்கினும், அவன் ருத்ர லோகத்தினை அடைந்து சிவ கண மாகி நெடு நாள் வசிப்பன்.” என அதிகப் பலன் கேட்கப்படுகின்றது.

வட தேயத்தில், இதன், " புருஷோத்தம யோகம். " என்னும் 15-வது அத்தியாயத்தினைப் பரமஹம்ச சந்யாசிகள், போஜநத்துக்கு உட்காரும் சமயம் பாராயணஞ் செய்து, 4-வது அத்தியாயம் 24-வது சுலோகத்தின் பொருளினை யுடைய சரமோபநிஷத் 26-வது மந்திரம் ஆன, **ब्रह्मार्पणं ब्रह्महर्वि ब्रह्माग्नौ ब्रह्मणाहुतम् । ब्रह्मैव तेन गन्तव्यम् ब्रह्म कर्म समाधिना ॥** என்னும் சுலோகத்தினை ஸ்மரித்து, பிரஹ்மார்ப்பணம் செய்து புஜிக்கின்றனர்.

அது போலவே, தென் தேயத்தில், கோவிலூர் மடத்தின் வழி வந்த பரமஹம்ச சந்யாசிகளும், வித்தியார்த்திகளும், பகவத் வாக்கிய மாகிய சம்ஸ்கிருத வாணி ரூப கீதையினையும், தமிழ் வாணி ரூப கீதையினையும், போஜநத்திற்கு உட்காரும் சமயம் (15-வது அத்தியாயத்தினை) பாராயணஞ் செய்து, புஜிக்கின்றனர்.

" 15-வது அத்தியாயத்தின் அரைச் சுலோகத்தினைப் பாராயணஞ் செய்து கொண்டு இருந்த கௌட தேசத்தில், "சாபேருண்டன்" என்னும் அரசன் மோக்ஷம் அடைந்தான். ", என்று, பத்ம புராணங் கூறுவதால், பகவற் கீதையின், சம்ஸ்கிருதத்தில், " புருஷோத்தம யோகம் " என்றும், தமிழில், " பிரபஞ்ச அத்தியாயம் " என்றும் பெய ருடைய, 15-வது அத்தியாயத்தினை மாத்திரம், தேவ நாகரி எழுத்தில், சுலோகம் பதம், பதப் பொருளும், தமிழில், கவியும், உரையும், சேர்த்து அச்சிடின், பாராயணஞ் செய்பவர்கட்கு அநுகூல மாக இருக்கும் என்றும், பொருளை உணர்ந்து பாராயணஞ் செய்வது நன்மை யளிக்கும் என்றும், கருதி இம் முயற்சியில் பிரவேசித்தோம். அன்பர்கள் யாவரும் வாங்கி உணர்ந்து, பாராயணஞ் செய்து, இன்புறுவார்களாக.

**காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,**
திருப் பூ வணம்.

24-5

# निर्गुणाष्टोत्तर शत नामावलि.
## நிர்க்குணாஷ்டோத்தர சத நாமாவளி.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| १ | ॐ अखंडाय | नमः | 1 | ஓம் | அகண்டாய | நம: |
| २ | ,, अकर्त्रे | ,, | 2 | ,, | அகர்த்ரே | ,, |
| ३ | ,, अकामाय | ,, | 3 | ,, | அகாமாய | ,, |
| ४ | ,, अकारणाय | ,, | 4 | ,, | அகாரணாய | ,, |
| ५ | ,, अहेयाय | ,, | 5 | ,, | அஹேயாய | ,, |
| ६ | ,, अक्रोधाय | ,, | 6 | ,, | அக்ரோதாய | ,, |
| ७ | ,, असंगाय | ,, | 7 | ,, | அஸங்காய | ,, |
| ८ | ,, असंसारिणे | ,, | 8 | ,, | அஸம்ஸாரிணே | ,, |
| ९ | ,, अशरीरिणे | ,, | 9 | ,, | அசரீரிணே | ,, |
| १० | ,, अचलाय | ,, | 10 | ,, | அசலாய | ,, |
| ११ | ,, अच्युताय | ,, | 11 | ,, | அச்யுதாய | ,, |
| १२ | ,, अक्षराय | ,, | 12 | ,, | அக்ஷராய | ,, |
| १३ | ,, अणवे | ,, | 13 | ,, | அணவே | ,, |
| १४ | ,, अद्वैताय | ,, | 14 | ,, | அத்வைதாய | ,, |
| १५ | ,, अनंताय | ,, | 15 | ,, | அநந்தாய | ,, |
| १६ | ,, अनादये | ,, | 16 | ,, | அநாதயே | ,, |
| १७ | ,, अनादिमुक्ताय | ,, | 17 | ,, | அநாதிமுக்தாய | ,, |
| १८ | ,, अनावृताय | ,, | 18 | ,, | அநாவ்ருதாய | ,, |
| १९ | ,, अनुपादेयाय | ,, | 19 | ,, | அநுபாதேயாய | ,, |
| २० | ,, अनूतनाय | ,, | 20 | ,, | அநூதநாய | ,, |
| २१ | ,, अनेकरूपाय | ,, | 21 | ,, | அநேகரூபாய | ,, |
| २२ | ,, अभयाय | ,, | 22 | ,, | அபயாய | ,, |
| २३ | ,, अपरिच्छिन्नाय | ,, | 23 | ,, | அபரிச்சிந்நாய | ,, |
| २४ | ,, अपरोक्षाय | ,, | 24 | ,, | அபரோக்ஷாய | ,, |
| २५ | ,, अभेदाय | ,, | 25 | ,, | அபேதாய | ,, |
| २६ | ,, अभोक्त्रे | ,, | 26 | ,, | அபோக்த்ரே | ,, |
| २७ | ,, अप्रमेयाय | ,, | 27 | ,, | அப்ரமேயாய | ,, |

24-5



| | | | | | |
|---|---|---|---|---|---|
| २८ | ॐ अप्रवृत्ताय | नमः | 28 | ஓம் அப்ரவ்ருத்தாய | நம: |
| २९ | ,, अप्राणाय | ,, | 29 | ,, அப்ராணாய | ,, |
| ३० | ,, अमनसे | ,, | 30 | ,, அமநஸே | ,, |
| ३१ | ,, अमृताय | ,, | 31 | ,, அமிர்தாய | ,, |
| ३२ | ,, अलोभाय | ,, | 32 | ,, அலோபாய | ,, |
| ३३ | ,, अव्याकृताय | ,, | 33 | ,, அவ்யாகிருதாய | ,, |
| ३४ | ,, आद्ये | ,, | 34 | ,, ஆதயே | ,, |
| ३५ | ,, आत्मने | ,, | 35 | ,, ஆத்மநே | ,, |
| ३६ | ,, आनन्दरूपाय | ,, | 36 | ,, ஆநந்தரூபாய | ,, |
| ३७ | ,, उन्नताय | ,, | 37 | ,, உந்நதாய | ,, |
| ३८ | ,, एकरूपाय | ,, | 38 | ,, ஏகரூபாய | ,, |
| ३९ | ,, कारणाय | ,, | 39 | ,, காரணாய | ,, |
| ४० | ,, कूटस्थाय | ,, | 40 | ,, கூடஸ்தாய | ,, |
| ४१ | ,, सत्याय | ,, | 41 | ,, ஸத்யாய | ,, |
| ४२ | ,, सद्रूपाय | ,, | 42 | ,, ஸத்ரூபாய | ,, |
| ४३ | ,, शंभवे | ,, | 43 | ,, சம்பவே | ,, |
| ४४ | ,, सर्वकारणाय | ,, | 44 | ,, ஸர்வகாரணாய | ,, |
| ४५ | ,, सर्वगताय | ,, | 45 | ,, சர்வகதாய | ,, |
| ४६ | ,, सर्वसमाय | ,, | 46 | ,, ஸர்வஸமாய | ,, |
| ४७ | ,, सर्वज्ञाय | ,, | 47 | ,, ஸர்வக்ஞாய | ,, |
| ४८ | ,, सर्वतोमुखाय | ,, | 48 | ,, ஸர்வதோமுகாய | ,, |
| ४९ | ,, सर्वाकाराय | ,, | 49 | ,, ஸர்வாகாராய | ,, |
| ५० | ,, सर्वाधाराय | ,, | 50 | ,, ஸர்வாதாராய | ,, |
| ५१ | ,, सर्वाधिष्ठानाय | ,, | 51 | ,, ஸர்வாதிஷ்டாநாய | ,, |
| ५२ | ,, सर्वात्मने | ,, | 52 | ,, ஸர்வாத்மநே | ,, |
| ५३ | ,, सर्वाभावाय | ,, | 53 | ,, ஸர்வாபாவாய | ,, |
| ५४ | ,, साक्षिणे | ,, | 54 | ,, ஸாக்ஷிணே | ,, |
| ५५ | ,, शान्ताय | ,, | 55 | ,, சாந்தாய | ,, |



| | | | | | |
|---|---|---|---|---|---|
| ५६ | ॐ चिन्मात्राय | नमः | 56 | ஓம் சிந்மாத்ராய | நம: |
| ५७ | ,, शिवाय | ,, | 57 | ,, சிவாய | ,, |
| ५८ | ,, शुद्धाय | ,, | 58 | ,, சுத்தாய | ,, |
| ५९ | ,, स्वप्रकाशाय | ,, | 59 | ,, ஸ்வப்ரகாசாய | ,, |
| ६० | ,, स्वयंप्रकाशाय | ,, | 60 | ,, ஸ்வயம்ப்ரகாசாய | |
| ६१ | ,, स्वयाय | ,, | 61 | ,, ஸ்வயாய | ,, |
| ६२ | ,, शून्याय | ,, | 62 | ,, சூந்யாய | ,, |
| ६३ | ,, क्षेत्रज्ञाय | ,, | 63 | ,, க்ஷேத்ரக்ஞாய | ,, |
| ६४ | ,, ज्ञानस्वरूपाय | ,, | 64 | ,, ஞாநஸ்வரூபாய | ,, |
| ६५ | ,, स्थाणवे | ,, | 65 | ,, ஸ்தாணவே | ,, |
| ६६ | ,, दृक्स्वरूपाय | ,, | 66 | ,, த்ருக்ஸ்வரூபாய | ,, |
| ६७ | ,, नानारूपाय | ,, | 67 | ,, நாநாரூபாய | ,, |
| ६८ | ,, निष्क्रियाय | ,, | 68 | ,, நிஷ்கிரியாய | ,, |
| ६९ | ,, निष्प्रकृतये | ,, | 69 | ,, நிஷ்ப்ரகிருதயே | ,, |
| ७० | ,, निष्प्रपचाय | ,, | 70 | ,, நிஷ்ப்ரபஞ்சாய | ,, |
| ७१ | ,, नित्यमुक्ताय | ,, | 71 | ,, நித்யமுக்தாய | ,, |
| ७२ | ,, नित्यानन्दाय | ,, | 72 | ,, நித்யாநந்தாய | ,, |
| ७३ | ,, नित्याय | ,, | 73 | ,, நித்யாய | ,, |
| ७४ | ,, निरञ्जनाय | ,, | 74 | ,, நிரஞ்ஜநாய | ,, |
| ७५ | ,, निरवयवाय | ,, | 75 | ,, நிரவயவாய | ,, |
| ७६ | ,, निराकाराय | ,, | 76 | ,, நிராகாராய | ,, |
| ७७ | ,, निराधाराय | ,, | 77 | ,, நிராதாராய | ,, |
| ७८ | ,, निरिंद्रियाय | ,, | 78 | ,, நிரிந்திரியாய | ,, |
| ७९ | ,, निरीश्वराय | ,, | 79 | ,, நிரீசுவராய | ,, |
| ८० | ,, निरुपद्रवाय | ,, | 80 | ,, நிருபத்ரவாய | ,, |
| ८१ | ,, नीरूपाय | ,, | 81 | ,, நீரூபாய | ,, |
| ८२ | ,, निर्गुणाय | ,, | 82 | ,, நிர்க்குணாய | ,, |
| ८३ | ,, निस्संबन्धाय | ,, | 83 | ,, நிஸ்ஸம்பந்தாய | ,, |
| ८४ | ,, निर्जीवाय | ,, | 84 | ,, நிர்ஜீவாய | ,, |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ८५ | ॐ | निर्दोषाय | नमः | 85 | ஓம் | நிர்த்தோஷாய | நம: |
| ८६ | ,, | निर्वद्धाय | ,, | 86 | ,, | நிர்ப்பத்தாய | ,, |
| ८७ | ,, | निर्मलाय | ,, | 87 | ,, | நிர்மலாய | ,, |
| ८८ | ,, | निर्लेपाय | ,, | 88 | ,, | நிர்லேபாய | ,, |
| ८९ | ,, | निर्विकल्पाय | ,, | 89 | ,, | நிர்விகல்பாய | ,, |
| ९० | ,, | निर्विकारिणे | ,, | 90 | ,, | நிர்விகாரிணே | ,, |
| ९१ | ,, | निर्विशेषाय | ,, | 91 | ,, | நிர்விசேஷாய | ,, |
| ९२ | ,, | निर्विषयाय | ,, | 92 | ,, | நிர்விஷயாய | ,, |
| ९३ | ,, | निर्वृताय | ,, | 93 | ,, | நிர்விர்தாய | ,, |
| ९४ | ,, | परमानन्दाय | ,, | 94 | ,, | பரமாநந்தாய | ,, |
| ९५ | ,, | परमार्थाय | ,, | 95 | ,, | பரமார்த்தாய | ,, |
| ९६ | ,, | परिपूर्णाय | ,, | 96 | ,, | பரிபூர்ணாய | ,, |
| ९७ | ,, | प्रत्यक्स्वरूपाप | ,, | 97 | ,, | ப்ரத்யக்ஸ்வரூபாய | |
| ९८ | ,, | प्रत्यक्षाय | ,, | 98 | ,, | பிரத்யக்ஷாய | ,, |
| ९९ | ,, | ब्रह्मणे | ,, | 99 | ,, | ப்ரஹ்மணே | ,, |
| १०० | ,, | बुद्धाय | ,, | 100 | ,, | புத்தாய | ,, |
| १०१ | ,, | पुरातनाय | ,, | 101 | ,, | புராதநாய | ,, |
| १०२ | ,, | महते | ,, | 102 | ,, | மஹதே | ,, |
| १०३ | ,, | महाशून्याय | ,, | 103 | ,, | மஹாசூந்யாய | ,, |
| १०४ | ,, | मनोवाचामगोचराय | | 104 | ,, | மனோவாசாமகோச | |
| १०५ | ,, | मुक्ताय | ,, | 105 | ,, | முக்தாய | ,, [ராய |
| १०६ | ,, | यथार्थवस्तुने | ,, | 106 | ,, | யதார்த்தவஸ்துநே | ,, |
| १०७ | ,, | वस्तुने | ,, | 107 | ,, | வஸ்துநே | ,, |
| १०८ | ,, | विभवे | ,, | 108 | ,, | விபவே | ,, |

ॐ श्रीमदखण्डपरिपूर्णसच्चिदानन्दाद्वैत ज्योतिर्लिङ्गस्वरूप
श्री देशिक स्वामिने नमो नमः
नाना विध मन्त्र पुष्पाणि समर्पयामि.

ஓம் ஸ்ரீமத் அகண்ட பரிபூர்ண சச்சிதாநந்த அத்வைத
ஜோதி லிங்க ஸ்வரூப ஸ்ரீ தேசிக ஸ்வாமிநே நமோ நம:
நாநா வித மந்திர புஷ்பாணி சமர்ப்பயாமி.

உ

# முகவுரை.

மனிதன் நன்மையினை அடைய வேண்டுமாயின், தன்னிடத்துள்ள கெட்ட குணங்களைப் போக்க வேண்டும். அக் குணங்கள் இவை எனத் தெரிய வேண்டும். அவற்றினைத் தெளிந்து நீக்குவதற்காகப் பெயர் விளங்காப் பெரியார் ஒருவர் சம்ஸ்கிருதத்தில் “மூர்க்க சதகம்” எனப் பெயர் வைத்து 26 சுலோகத்தில் ஒரு நூல் செய்திருக்கின்றார். அதன்கண் கெட்ட குணம் நூறு சொல்லப்பட்டிருக்கின்றது. அவை யாவும் மனிதன் முக்கியமாகத் தள்ளத்தக்கதாகும். குற்றம் அற்ற ரத்ந மணி எப்படி உலகத்தில் நன்றாக விளங்குகின்றதோ, அப்படிக் கெட்ட குணங்களை விட்ட மனிதன் உயர்வாக விளங்குகின்றான் என ஆரம்ப சுலோகத்தில் கூறுகின்றார். இக் குணங்கள் யாவும் மனிதர்கள் அநுபவத்தில் உள்ளவையே யாகும். இக் கெட்ட குணங்கள் பெரும்பான்மையாக நீதி நூல் திருக்குறள் முதலியவற்றில் கூறப்பட்டும் இருக்கின்றன. ஆயினும், தனியாக ஒரு நூலில் நூறு குணங்களும் வியக்தமாகக் கூறப்பட வில்லை. “தன் குற்றம் பார்க்குமவருளரோ” எனச் சிவப்பிரகாச சுவாமிகள் கூறியிருப்பது போன்று, தத் தம் குற்றத்தை விசாரித்து அவற்றை விட விருப்புடையவர்கட்கு இந் நூல் பேருபகாரமும், பெரு விருந்தும் ஆகும்.

“1. சாமர்த்தியம் இருந்தும் முயற்சி செய்யாதவன் மூர்க்கன், 3. வேசியினுடைய வார்த்தையில் விசுவாசம் வைப்பவன் மூர்க்கன். 6. நிலம் உழுதல் முதலியவற்றின் லாபத்தில் சம்சயம் வைப்பவன் மூர்க்கன். 9. கடன் வாங்கி வீடு முதலியன வாங்குபவன் மூர்க்கன். 23. தனது திரவியத்தினை புத்திரனிடத்தில் கொடுத்து விட்டுத் தான் ஏழையாகி விடுபவன் மூர்க்கன்” என இவை போன்று நூறு கெட்ட குணங்கள் கூறப்படுகின்றன. ஒவ்வொரு கெட்ட குணமும் அநுபவமானதே. இந்தத் துர்க்குணங்களை ஒவ்வொருவரும் அவசியம் போக்கிக் கொள்ள வேண்டும். நற்குண சம்பாதனத்திற்கு இது மிக அரிய நூலாயிருப்பதால், தமிழ் மக்கட்குப் பயன்படும் ஆறு நாகர அக்ஷரத்தில் சுலோகம் - பதம் - தமிழில் பதப் பொருள் கருத்து என்பவற்றை செவ்விய தமிழில் எழுதி வெளியிட்டிருக்கின்றோம்.

இந் நூல் செய்தவர் பெயர் முதலியன பின் தெரியின் மறு பதிப்பில் விளக்கமாக வெளியிடுவாம். இதற்கு ஹிந்திப் பாஷையில் தோஹாவும், வியாக்யானமும் அச்சாகி விளங்குகின்றது.

இதனை 1944 வருஷம் ஆகஸ்டு௴ 1 தேதி வட ஆற் காடு ஜில்லா, திரு வத்திபுரம் பழநி யப்ப நகரில் மொழி பெயர்த்து உரை எழுதினேம். ஏழு வருஷம் சென்று இப்போது அச்சாகி யிருக்கின்றது.

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,
வேதாந்த மடம், திருப் பூ வணம்.

## பாயிரம்.

தாவிலார் சிக்க லகந்தலிங் கேச தேசிகன் பாததா மரையைக், கோவிலூர் வாழும் முத்திரா மேச குருவினைச் சிதம்பர விறையை, மேவருந் துறவாண் டவரடி யிணையை மெய்ப்பத மடைந்தவர்க் கருளும், நாவலர் பரவும் வீர ஞாநேச நல்லிறை பதங்களைப் பணிவாம். (1)

அடைந்தவர்க் கருளு மன்பினை யுடைய வருளிறை விரமா முநியை, மிடைந்தவர்க் கபயங் கொடுத்திருள் கெடுக்கும் மெய்முத்தி ராமநல் லிறையைக், கடைந்தவர்க் காணின் களிப்புறுங் கருணைக் கடலெனுஞ் சிதம்பர விறையை, குடைந்தவ ரருண சலவிறை பதத்தைக் குறைவின்றி மனத்தினில் வைப்பாம். (2)

திருக்களர் விளங்கும் வீரசே கரன்செய் யடியிணை களைத்திநம் போற்றி, மருக்கமழ் மூர்க்க சதகமென் னூலை மாசிலாத் தமிழ்மொழி யதனில், தருக்கிளர் திருப்பூ வணமதி லுறையுந் தவமுறு காசிகா நந்தன், கருக்கிளர் நீங்கும் படியாதாப் பெயர்த்தான் கண்டுதான் களிப்புற மாதோ. (3)

---



கிருஷ்ணாய பரப் பிரஹ்மணே நம:

# भगवद्गीता पंचदशोऽध्याय:

## पुरुषोत्तम योगः

श्री भगवानुवाच ।

ऊर्ध्वमूलमधः शाखमश्वत्थं प्राहुरव्ययम् ।
छन्दांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥ (१)

(இ-ள்.) मूलम् - வேர், ऊर्ध्वम् - மேலது, शाखम् - சாகை, अधः - கீழது, अव्ययम् - நாசம் அற்ற, अश्वत्थम् - அரசு, प्राहुः - (என்று) கூறுகின்றனர், छंदांसि - சந்தஸ்க் கள், यस्य - எத னுடைய, पर्णानि - இலைகள், (ஆகின்ற னவோ), तम् - அதை, यः - எவன், वेद - அறிந்தனனோ, स - அவன், वेद - वित् - வேதத்தினை அறிந்தவன் (ஆகின் றான். (எ-று.)

## பகவற் கீதை 15-வது — பிரபஞ்ச அத்தியாயம்.

சாயை யன்னவென் வினைத்தளை யறுக்கவோ தகவில்
பேயை யின்னுயிர் செகுக்கவோ பிள்ளையாய் வளர்ந்தான்
வேயை யோன்றிய வரிசிலை விசயற்கு மீள
மாயை தன்னையோர் மரமோக்க வருணிக்க லுற்றான். (1)

(இ—ள்.) சாயை - (தேகத்தின்) சாயை, அன்ன - போல (விட்டு நீங்காத), என் - (புண்ணிய பாப ரூப மான) என்னு டைய, வினை - வினை யாகிற, தளை - விலங்கை, அறுக்கவோ -

சேதிக்கவோ, தகவு இல் - கிருபை யில்லாத, பேயை - பூதகியை, இன் - இனிய, உயிர் - உயிரை, செகுக்கவோ - அழிக்கவோ, பிள்ளை ஆய் - (நந்த கோபன் திரு மனையில்) மதலை யாய், வளர்ந் தான் - வளர்ந்த ஸ்ரீ கிருஷ்ண பகவான், வேயை - மூங்கிலால், ஒன்றிய - பொருந்திய, வரி - வரிந்த, சிலை - தநுசை உடைய, விசயற்கு - அருச்சுநனுக்கு, மீள - (பூர்வ அத்தியாயங்களில் அங் கங்கே சொன்னதும் தவிர) மீண்டும் (இவ் வத்தியாயத்தில்), மாயை தன்னை - (சம்சார ரூப மான) மாயையை, ஓர் - ஓர், மரம் - விருக்ஷத்தை, ஒக்க - ஒப்பாக, வருணிக்கல் உற்றான் - சிறப்பிக்கத் தொடங்கினர், (எ-று).

மாயை தன்னை என்பதில் தன் அசை.

வேர்மேலது தலைகீழது வீவில்லது வேதத்
தேர்மேவிய விலைமேவிய தியாவும்புக றலினல்
ஆர்மேவிய வசுவத்தம தேனவே யரசதனின்
பேர்மேயது பெருமாயைசெய் பிறவிப்பெரு மரமே. (2)

(இ—ள்.) பெரும் - மஹா, மாயை - மாயையினால், செய் - பண்ணப்பட்ட, பிறவி - சம்சார ரூப மான, பெரும் - பெரிய, மரம் - விருட்ச மானது, மேலது - மேலானதை, வேர் - மூல மாக வுடையது, கீழது - கீழானவைகளை, தலை - சாகைக ளாக வுடையது, வீவு இல்லது - நாசம் ஆகாதது, வேதத்து - வேதத்தினது, ஏர் - கர்ம காண்ட வாக்கியங்களை, மேவிய - பொருந்திய, இலை - பர்ணங்க ளாக, மேவியது - உடையது, ஆர் மேவிய - நிறைந்த, அசுவத்தமது - அசுவத்தம், எனவே - என்று, யாவும் - (சுருதி ஸ்மிருதிகள்) அனைத்தும், புகல்தலினல் - வர்ணித்தலால், அரசதனின் - அரசினது, பேர் - பெயரை, மேயது - பொருந்தியது, (எ-று).



ஏ அசை. "அரசது" "அசுவத்தமது" என்பவற்றில் அது பகுதிப் பொருள் விகுதி.

[இங்ஙனம் தொகுத்துக் கூறியதை வகுத்துக் கூறத் தொடங்கி, "வேர் மேலது" என்பதற்கு வியாக்யாநம் செய்கின்றார்.]

இவ்வாறித னியல்பாகிய வகையாவெனி லியாதும்
ஒவ்வாவகை பெரிதாகிய பிரமத்துரு விடையே
வைவாள்வலி யுழவாவரன் முறையேவரன் முறையே
மெய்வான்முதல் வருமாதலின் மேலானது வேரே. (3)

(இ—ள்.) வை - கூர்மை பொருந்திய, வாள் - வா ளாயுதத் தையும், வலி - வலிமையையும் உடைய, உழவா - வீரா, இவ் வாறு - இந்தப் பிரகாரம் (சுருதி ஸ்மிருதிகளிற் கூறிய), இதன் - இந்தச் சம்சார விருட்சத்தின், இயல்பு ஆகிய - சுபாவம் ஆகிய, வகை - கூறுபாடுகள், யா - எவை, எனின் - என்றால், யாதும் - (யாது) ஒரு பொருளும், ஒவ்வா வகை - (தனக்குச்) சமாதாநம் ஆகாதபடி, பெரிது ஆகிய - மஹத் தாகிய, பிரமத்து - பிரஹ்மத்தின், உருவிடையே - சொரூபத்தின்கண் ணின்றே, வரல் முறையே வரல் முறையே - உண்டாகும் கிரமப்படியே, மெய் - உண்மை (போல), வான் முதல் - ஆகாச முதல் (தூல தேக பரியந்த மான ஜகத் தனைத்தும்), வரும் ஆதலின் - உண்டாகின்ற வாதலால், மே லானது - (சொப்பிரகாச மாய் நித்திய மாய் சர்வ காரணங்கட்கும்) மே லான காரண மான அந்தப் பிரஹ்ம மானது, வேர் - மூல மாம், (எ-று).

ஏ அசை.

["தலை கீழது வீ வில்லது" என்னும் மொழி களுக்கு உரை செய்கின்றார்.]

ஊழால்வரு முலகாகியு முயிராகியு மெழலால்
கீழானது தலையாவுறு முதலீறுடை கிளர்வாய்ச்
சூழாகிய பிறவித்தொட ரொருகாலமு மடையப்
பாழாம்வகை யழியாமையி லழியாததோர் படியே. (4)

(இ—ள்.) ஊழால் - (இச் சம்சார விருட்ச மானது பிராணிகளின்) அதிருஷ்ட வசத்தால், வரும் - வாராநின்ற, உலகு ஆகியும் - உலகங்கள் ஆகியும், உயிர் ஆகியும் - உயிர்கள் ஆகியும், எழலால் - எழுவதால், கீழானது - காரிய உபாதிகளை உடைய இரண்ணிய கர்ப்பாதிகளை, தலையா உறும் - சாகைக ளாகப் பொருந்தும், முதல் - தோற்றம், இடை - ஸ்திதி, ஈறு - நாசங்கள், கிளர் வாய் - பெருக்க மாய், சூழாகிய - பந்த ரூப மாகிய, பிறவி - சம்சார ரூப விருட்சத்தின், தொடர் - பிரவாக மானது, ஒரு - (யாது) ஒரு, காலமும் - காலத்தும், அடைய - முழுதும், பாழ் ஆம் வகை - சூநியம் ஆகும்படி, அழியாமையில் - அபாவ மாகாமையின், அழியாதது - அவ்விய மான, ஓர் படியே - ஒரு தன்மையதே, (எ-று).

[ "வேதத் 'தேர் மேவிய விலை மேயது' அசுவத்தம்" என்பவற்றிற்கு உரை செய்கின்றார்.]

கருநாண்முதல் வினையாலது வளர்காதசெய் தலினல்
அருநான்மறை யவையேயிலை யவையாமென வறிநீ
வருநாள்களி னொருநாள்பெறும் வகையின்மையி னலே
பெருநாடறி யசுவத்தம தெனலாயது பெயரே. (5)

(இ—ள்.) கரு - கர்ப்பத்தில் உண்டான, நாள் - நாள், முதல் - முத லாக, வினையால் - (புண்ணிய பாப ரூப) கர்மங்களால், அது - அச் சம்சார விருட்ச மானது, வளர் - வளராநிற்கும், காதல் - அபேட்சை, செய்தலினல் - உடையவரா யிருத்தலால், அரும் - அரிய, நால் - நான்கு, மறை யவையே - வேதங்களே, இலை யவை ஆம் - (தர்ம அதர்மங்களைப் பிரகாசிப்பிக்கும் வழி யாக அதற்குப்) பர்ணங்க ளாம், என - என, நீ - நீ, அறி - அறிதி, வரும் - வாராநின்ற, நாள்களின் - திநங்களுள்ளே, ஒரு நாள் - ஒரு நாள், பெறும் - இருக்கும் என, வகை - விசுவசிக்கும்படி, இன்மையினல் - இல்லாமையினலே, பெரும் - பெரிய, நாடு - உலக, அறி - பிரசித்த மான, அசுவத்தமது - அசுவத்தம், எனல் - என்று, ஆயது - சொல்லல் ஆயிற்று, பெயர் - நாம மானது, (எ-று).

'அசுவத்தமது' என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி.

[மூலத்தோடு கூடச் சம்சார ரூப விருட்சத்தின் ஞாநத்தை, ஸ்ரீ பகவான் ஸ்துதி செய்கின்றார்.]

மற்றிப்படி நிகழ்கின்றவிம் மாயாமர மிதனின்
பெற்றித்திற மிதுவல்லது பிறிதின்மையி னலே
யுற்றிப்படி யுணர்வார்பொரு ளெல்லாமுமு ணர்ந்தார்
இற்றிப்பெரு மரத்தின்றிற மின்னுஞ்சில வுளகேள். (6)

(இ—ள்.) இப்படி - இவ் வாருக, நிகழ்கின்ற - விளங்காநின்ற, இம் மாயா - இச் சம்சார, மர மிதனின் - விருட்சத்தினுடைய, பெற்றி - தன்மை யாகிய, திறம் - கூறுபாடுகள், இது - இவை, அல்லது - அல்லாமல், பிறிது - வேறு ஒரு தன்மைகள், இன்மையினலே - இல்லாமையினலே, இப்படி - இங்கே கூறிய படியே, உற்று உணர்வார் - (இதனை) நுட்ப மாய் அறியாநிற்பவர், பொருள் - (வேத) அர்த்தங்கள், எல்லாமும் - முழுதும், உணர்ந்தார் - அறிந்தோ ராவர், இற்று - இத் தன்மைய தான, இப் பெரும் - இப் பெரிய, மரத்தின் - (சம்சார) விருட்சத்தின், திறம் - கூறு

பாடான அவயவ கற்பனைகள், இன்னும் - மேலும், சில - சில, உள - உள. கேள் - (நீ) கேட்பாயாக, (எ-று).

மற்று அசை நிலை.

**अधश्चोर्ध्वं प्रसृतास्तस्य शाखा गुणप्रवृद्धा विषयप्रवालाः ।**
**अधश्च मूलान्यनुसन्ततानि कर्मानुबन्धीनि मनुष्यलोके ॥ (२)**

(இ-ள்.) **तस्य** - அதனுடைய, **शाखाः** - சாகைகள், **ऊर्ध्वम्** - மேலும், **अधः च** - கீழும், **प्रसृताः** - விரிந்திருக்கின்றன, **गुण - प्रवृद्धाः** - (சத்துவம் முதலிய) குணங்களால் கட்டப்பட்டன, **विषय - प्रवालाः** - (சப்தம் முதலிய) விஷயரூப முளைகளை உடையன, **मूलानि** - வேர்கள், **अधः च** - கீழும், **अनुसन्ततानि** - சிந்திக்கத் தக்கன, **मनुष्य - लोके** - மனித - லோகத்தில், **कर्म - अनुबन्धीनि** - கர்மங்களால் கட்டப்பட்டன வாம்.

[முற் கூறிய சம்சார விருட்சத்தின் அவயவங்களை மற்றொரு விதமாக இனிக் கற்பனை செய்கின்றார்.]

கண்ணேயெனை யனையாய்பல பிறவிக்கதி வழியே
மண்ணேமுதற் கீழாமுல கிடையேவளர் வனவும்
விண்ணேமுதன் மேலாமுல கிடையேமிடை வனவும்
எண்ணேறிய பவமாகிய பணையாலிசை தருமே. (7)

(இ—ள்.) கண்ணே - (எனது) கண்மணியும், எனை அனையாய் - என்னை யொப்பானவனுமான அருச்சுனா, பல - (சம்சார விருட்சமானது) நாநா வித, பிறவி - யோநிகளாகிய, கதி - கதிகளின், வழியே - வழியே, மண்ணே - பூமி, முதல் - முதலிய, கீழ் ஆம் உலகிடையே - கீழ் உலகத்து, வளர்வனவும் - வளரா நிற்பனவும், விண்ணே - விண், முதல் - முதலிய, மேல் ஆம் உலகிடையே - மேலுலகத்து, மிடைவனவும் - நெருங்கி நிற்பனவும் (ஆகிய), எண் - அளவு, ஏறிய - இறந்த, பவம் ஆகிய - பிறவிகளாகிய, பணையால் - பணைகளோடு, இசை தரும் - கூடி நிற்கும், (எ-று).

ஏ ஈற்று அசை.



[இதுவு மது.]

நெறியால்வரு தருவேர்பல நிலமாமுல கிடையே
அறியாமையோ டுறவீழ்தலில் வேர்கீழினு முளதாம்
பிறியாதெழு குணமாகிய பெருநீர்மையில் வளரும்
பொறியாகிய இவைதாந்தளிர் போன்மேயது பொலிவே. (8)

(இ—ள்.) நெறியால் - (ஊர்த்வ லோகங்கள் அதோ லோகங்களிற் புஜித்த நாநா வித போகாநுபவ) வாயிலால், வருதரு - உண்டாகின்ற, வேர் - (இராகத் துவேஷாதி வாசனைகள் என்னும்) வேரானது, பல - பல, நிலம் ஆம் உலகிடையே - மாநுட வுலகின்கண்ணே, அறியாமையோடு - அஞ்ஞானத்தோடு, உற - திடதரமாய், வீழ்தலில் - வீழ்ந்திருத்தலால், வேர் - (சம்சார விருட்சத்திற்கு) மூலமானது, கீழினும் - கீழேயும், உளது ஆம் - உளதாம், பிறியாது - நீங்காது, எழு - எழுகின்ற, குணம் ஆகிய - (சத்துவாதி) குணங்களாகிய, பெரும் நீர்மையில் - உபாதானத் தன்மைகளால், வளரும் - (ஜலத்தால் விருட்சம் போல) வளராநிற்கும், பொறி ஆகிய இவை தாம் - (இந்திரியங்களால் ஜநியாநின்ற விருத்திகளோடு சம்பந்தமான) சப்தாதி விஷயங்களானவை, தளிர் - பல்லவங்கள், போல் - போன்று, பொலிவு - அழகாக, மேயது - பொருந்தியது, (எ-று).

தாம் ஏ அசைகள்.

**न रूपमस्येह तथोपलभ्यते नांतो न चादिर्न च संप्रतिष्ठा ।**
**अश्वत्थमेनं सुविरूढमूल मसङ्गशस्त्रेण दृढेन छित्त्वा ॥ (३)**

(இ-ள்.) **इह** - *இந்தச் சம்சாரத்தில் உள்ள பிராணிகள்,* **अस्य** - *இச் சம்சார விருக்ஷத்தினது,* **तथा** - *அவ் விதமான,* **रूपम्** - *சொரூபத்தை,* **न** - **उपलभ्यते** - *உணரார்,* **अंतः न** - *அந்தத்தையும் உணரார்,* **आदिः च न** - *ஆதியையும் உணரார்,* **संप्रतिष्ठा च न** - *மத்தியையும் உணரார்,* **सुविरूढ - मूलम्** - *அத் தன்மைய திட மான மூலத்தினை உடைய,* **एनम्** - *இந்த,* **अश्वत्थम्** - *அரச வடிவ சம்சார விருக்ஷத்தினை,* **दृढेन** - *மிகத் திட மான,* **असंग** - *வைராக்ய வடிவ,* **शस्त्रेण** - *வாளால்,* **छित्त्वा** - *சேதித்துப் (பிரஹ்மம் உணரற்பால தாம்.)*

**ततः पदं तत्परिमार्गितव्यं यस्मिन्गता न निवर्तन्ति भूयः ।**
**तमेव चाद्यं पुरुषं प्रपद्ये यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥ (४)**

(இ-ள்.) **ततः** - *அதனால்,* **तत्** - *அந்த,* **पदम्** - *பதமே,* **परिमार्गि तव्यम्** - *உணரத்தக்கது,* **यस्मिन्** - *எப் பதத்தில்,* **गताः** - *நிலைத்தவனாய் (வித்துவான்),* **भूयः** - *மறித்தும்,* **निवर्तन्ति च न** - *ஜந்மத்தினை யடைவ தில்லையோ,* **यतः** - *எப் புருஷனால்,* **प्रवृत्तिः** - *(இச் சம்சார விருக்ஷத்தின்) பிரவிருத்தி,* **पुराणी** - *அநாதி யாய்,* **प्रसृता** - *வந்துகொண்டிருக்கின்றதோ,* **तम्** - *அந்த,* **आद्यम्** - *ஆதி யாகிய,* **पुरुषम् - एव** - *புருஷனையே,* **प्रपद्ये** - *சரணாகதியாக அடைந்தேன்.*

[*முற் கூறிய சம்சாரத்தின்கண் அநிர்வசநீயத் தன்மை அருளிச் செய்கின்றார்.*]



கனவுந்திகழ் கழுதாளியு மிகுகந்தர்வ நகரும்
எனவந்தழி தலினாலுரு வதுவின்றிய தியாது
முனம்வந்திடு முதனாளொடு முடிவின்மையி னாலே
தனதந்தமு முதலுந்தெரி தரவில்லது தானே. (9)

(இ—ள்.) கனவும் - *(இச் சம்சார விருட்ச மானது) சொப்பந பதார்த்தமும்,* திகழ் - *(பொய் யாக) விளங்குகின்ற,* கழுதாளியும் - *பேய்த் தேரும்,* மிகு - *மே லான,* கந்தர்வ நகரும் - *கந்தருவ நகரமும்,* என - *போல,* வந்து - *தோன்றி,* அழிதலினால் - *அழிவதால்,* யாதும் - *சிறிதும்,* உருவது - *(தனக்கு என) உருவம்,* இன்றியது - *இல்லாதது,* முனம் - *முன்னே,* வந்திடும் - *(தான் இல்லாதிருந்து) உண்டாகும்,* முதல் நாளொடு - *ஆதி காலமும்,* முடிவு - *(பின்னர்த் தான் அபாவ மாகும்) அந்த காலமும்,* இன்மையினால் - *இல்லாமையினாலே,* தனது - *சம்சார விருட்சத்தினது,* அந்தமும் - *அந்தமும்,* முதலும் - *ஆதியும்,* தெரிதா இல்லது - *(எந்தப் பிராணிகளாலும்) அறியும்படிக் கில்லாதது,* (எ-று).

*தான் ஏ அசை நிலைகள். "உருவது" என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி.*

*ஆதி அந்தங்கள் இரண்டைப் பற்றியே மத்தியங் குறிப்பிடுவதால், அவை சித்தியாமையினாலே, மத்தியமும் சித்தியாது என்ப'து.*

[*அதனைச் சேதிக்கும் உபாயம் அருளிச் செய்கின்றார்.*]

மந்திர மாய விந்த மரத்தினைத் துறவேன் கின்ற
தந்திர வாளால் வெட்டித் தற்பர மாகி நின்றே
இந்திர சால மேன்ன யாவையுங் காட்டு கிற்கும்
அந்தமி லாத வேன்னை யடைகையே யடுப்ப தையா. (10)

(இ—ள்.) மந்திரம் ஆய - (அச்சுவத்தம் என்று வேதத்திற் சொல்லும்) இரகசிய மாகிய, இந்த மரத்தினை - இச் சம்சார விருட்சத்தை, தம் - தமது, திர உறவு - திட வைராக்கியம், என்கின்ற - என்னும், வாளால் - சஸ்திரத்தால், வெட்டி - சேதித்து (அதன் பின்னர் அதிகாரி யாயினோர் பிரம பத மறிய வேண்டியது.), [எவ் வுபாயத்தினல் பிரம பதம் அறியத் தக்க தேனிற் கூறுகின்றார்.] தற் பரம் - பிரம சொரூப மாய், ஆகின்றே - இருந்த வண்ணம் இருந்தே, இந்திர சாலம் - இந்திர சாலம், என்ன - போல, யாவையும் - (மாய மான இந்தப் பிரபஞ்சம்) அனைத்தையும், காட்டுகிற்கும் - தோற்றுவிக்கின்ற, அந்தம் - அந்தம், இலாத - அற்ற, என்னை - என்னை, அடைகையே - சர ணடைதலே, ஐயா - அருச்சுநா, அடுப்பது - (அதிகாரிகள் பிரம பதத்தை அறிதற் குரிய) உபாய மாம். (எ-று).

निर्मानमोहा जितसंगदोषा अध्यात्मनित्या विनिवृत्तकामाः ।
द्वन्द्वैर्विमुक्ताः सुखदुःखसंज्ञैर्गच्छन्त्यमूढाः पदमव्ययं तत् ॥ (५)

(இ-ள்.) **निर्मानमोहाः** - மாந மோகங்களை நிவிர்த்தித்த வரும், **जित - संग - दोषः** - சங்க தோஷங்களைச் செயித்த வரும், **अध्यात्म - नित्याः** - பரமாத்ம வடிவ விசாரத்தில் தத் பரரும், **विनिवृत्तकामाः** - காமம் நீங்கினவரும், **सुख - दुःख - संज्ञैः** - சுக துக்கங்கள் என்னும், **द्वंद्वैः** - (சீதோஷ்ண முதலிய) துவந்துவங்களை, **विमुक्ताः** - பரித்தியாகம் பண் ணினவரும் ஆகிய, **अमूढाः** - வித்துவான்கள், **तत्** - அந்த - **अव्ययम्** - அவ்வியய, **पदम्** - பதத்தை, **गच्छन्ति** - அடைவர்கள்.

न तद्भासयते सूर्यो न शशांको न पावकः ।
यद्गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम ॥ (६)



(இ-ள்.) **यत्** - எந்த நிர்க்குண மாகிய அத்விதீயப் பிரஹ்ம வடிவ வைணவ பதத்தை, **गत्वा** - அடைந்து, **निवर्तन्ते - न** - (தத்துவ ஞாநி) மீண்டும் திரும்புவ தில்லையோ, **तत्** - அந்தப் பதத்தை, **सूर्यः** - சூரியனும், **न** - (விளக்குகின் றது) இல்லை, **शशांकः** - சந்திரனும், **न** - (விளக்குகின்றது) இல்லை, **पावकः** - அக்கினியும், **भासयते - न** - பிரகாசிப்பிக் கின்ற தின்றும், **मम** - எனக்கு, **तत्** - அது, **परमम्** - மே லான, **धाम** - இடம் ஸ்வயம் பிரகாச வடிவ மாகலின் என்க.

[இதில் அத்வீதிய நிர்க்குணப் பிரஹ்ம ரூப மான வைஷ்ணவ பத மடைதற் கேது வான மற்றோ ருபாய மும், அவ் வைஷ்ணவ பதத்தின் விசேஷணமும், அருளிச் செய்கின்றார்]

துன்னிய வாசை கோபங் கடந்தவர் காணத் தோன்றும்
என்னுரு வியற்கை கேட்கி லியாவையுங் காட்டு கின்ற
மன்னிய வொளிகள் காணு வகையதாய் வந்து சேர்ந்தார்
பின்னியல் வேறோன் றுகாப் பெற்றிய னென்று பேசும். (11)

(இ—ள்.) துன்னிய - (ஊழ் வசத்தால் தம்மைக்) கிட்டா நின்ற, ஆசை கோபம் - (பிரியாப்பிரிய விஷயங்களா லுளவாகும்) இராகத் துவேஷ (முதலியவற்றை), கடந்தவர் - பரித்தியாகஞ் செய்த ஞாநிகள், காண - காணும்படிக்கு, தோன்றும் - தோன்று கிற்கும், என் - (அப்படிப்பட்ட வைஷ்ணவ பத மான) எனது, உரு - சொரூப, இயற்கை - சுபாவத்தை, கேட்கில் - (நீ) கேட் கில், யாவையும் - சர்வ ஜகத்தையும், காட்டுகின்ற - பிரகாசிப்பிக் கின்ற, மன்னிய - நிலைபெறுதலை யுடைய, ஒளிகள் - (சூரியன் சந்திரன் அக்கிநி என்னும்) ஒளிகளினல், காணு - பிரகாசிக்கப்

படாத, வகையது - தன்மையை யுடைய, ஆய் - (சொப்பிரகாச ஸ்வரூபம்) ஆய், வந்து - வந்து, சேர்ந்தார் - அடைந்தோர்கள், பின் - (சமுத்திரத்தை யடைந்த நதிகள் போல) பின்னர், இயல் - (தமது) சுபாவ மானது, வேறு - வேறு, ஒன்று - ஒரு வித மாக, ஆகா - ஆகாத, பெற்றியன் - தன்மையன், என்று - என்று, பேசும் - (என்னைச் சுருதிகள்) சொல்லும், (எ-று).

'வகையது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

**ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः ।**
**मनः षष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥ (௭)**

(இ-ள்.) **जीव - लोके** - இச் சம்சாரத்தில், **मम** - என்னுடைய, **अंशः एव** - அம்சமே, **सनातनः** - பழைமை யான, **जीव - भूतः** - ஜீவ வடிவ மாம், **मनः** - (அச் சீவன்) மநதை, **षष्ठानि** - ஆறுவ தாக உடைய, **प्रकृतिस्थानि** - பிரகிருதியின் கண் உள்ள, **इन्द्रियाणि** - இந்திரியங்களை, **कर्षति** - ஆகர்ஷணஞ் செய்கின்றான்.

[சுவர்க்காதிகளை அடைந்த கர்மிகள் அவசியம் மீளாநிற்பதும், சுழுத்தி, பிரளயங்களில், ஆத்ம பாவத்தை யடைந்த பிராணிகள் மீளாநிற்பதும், பிரசித்தம், ஆவதால், உமது பதத்தை அடைந்தோர் ஏன் மீளாநிற்பர் எனின், அதற்குக் காரணம் அருளிச் செய்கின்றார்.]

குடந்தோறுந் தோன்று கின்ற காயமுங் குலைதற் கேற்பத்
தடம்புன றோறுந் தோன்றுஞ் சந்திரன் றானு மென்ன
உடம்புக டோறும் வேறு யுயிரென நின்றே யந்த
விடம்படு புலன்க ளாறு மியல்பினி லியற்று வேனன்.(12)



(இ—ள்.) குடம் - கடம், தொறும் - தோறும், தோன்றுகின்ற - (அவச்சிந்ந மாய்த்) தோன்றாநின்ற, காயமும் - கடாகாயமும், குலைதற்கு - அசைதற்கு, ஏற்ப - ஏற்க, தடம் - தடாக, புனல் - ஜலங்கள், தோறும் - தோறும், தோன்றும் - (பிரதிவிம்பித்துத்) தோன்றும், சந்திரன் தானும் - (பிரதிபிம்ப) சந்திரனும், என்ன - போல, உடம்புகள் - சரீரங்கள், தோறும் - தோறும், வேறு ஆய் - அந்நியம் ஆய், உயிர் - ஜீவன், என - போல, நின்றே - நின்றே, அந்த - அந்தச் சரீரங்களில், இடம்படு - (அஞ்ஞாந ரூப மான பிரகிருதியின்கண்ணே சூட்சும ரூப மாக) அடங்கி யுள்ள, புலன்கள் - இந்திரியங்கள், ஆறும் - ஆறினையும், இயல்பினில் - (போகத்திற் கேது வான கர்மம் ஆனது உதய மாயின் அப் போகத்தின் பொருட்டு) அவ் வவ் விந்திரியங்களின் சுபாவ விஷயங்களில், நான் - (பரமாத்ம தேவ னான) நான், இயற்றுவேன் - பிரேரிப்பிப்பேன், (எ-று).

" சந்திரன் தான் " என்பதில், தான் அசை.

**शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः ।**
**गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाशयात् ॥ (௮)**

(இ-ள்.) **यत्** - எப் போது, **ईश्वरः** - இச் சீவாத்மா, **उत्क्रामति अपि च** - (இந்தச் சரீரத்தினின்றும்) வெளிக் கிளம்புகின்றதோ, **यत्** - எக் காலத்தில், **शरीरम्** - (வேறு) சரீரத்தினை, **अवाप्नोति** - அடைகின்றதோ, **एतानि** - (அப் போது) மநதோடு கூட இவ் விந்திரியங்களை, **गृहीत्वा** - கிரகித்துக் கொண்டு, **संयाति** - செல்லுகின்றது, **आशयात्** - (புஷ்பம் முதலிய) ஸ்தாநத்தினின்றும், **वायुः** - காற்று, **गन्धान्** - கந்தத்தை (இழுத்துச் செல்வது), **इव** - போல வாம்.

[இச் சீவாங்மா எந்தக் காலத்தில் மந முதலிய ஆறிந்திரியங்களையும் ஆகர்ஷணஞ் செய்கின்றான் என்னும் அருச்சுநன் சங்கைக்கு, ஸ்ரீ பகவான் அருளிச் செய்கின்றார்.]

பூக்கமழ் நாற்றங் கொண்டு பொருவளி போகு மாபோல்
தீக்கனல் கின்ற வேலோய் சீவனென் கின்ற சீரோன்
ஆக்கையை யெய்தும் போது மதனைவிட் டேகும் போதும்
போக்கரி தாய வாறு புலன்களைக் கொண்டு போமால். (13)

(இ—ள்.) தீ - அக்கியைப் (போல), கனல்கின்ற - ஒளிரா நின்ற, வேலோய் - வேலை யுடைய அருச்சுநா, பொரு - பொருந்திய, வளி - வாயு வானது, பூ - புஷ்பத்தினின்றும், கமழ் - பரிமளி யாநின்ற, நாற்றம் - கந்தத்தை, கொண்டு - (கிரகித்துக்) கொண்டு, போகும் ஆ(று) - செல்லாநிற்குந் தன்மை, போல் - போல, சீரோன் - (தேகாதி சங்காதங்கட்குச் சுவாமி யாவதால்) ஈசுவர ரூபன், என்கின்ற - என்னும், சீவன் - சீவ ஆத்மா, ஆக்கையை - (கர்ம வசத்தால் ஓர் சரீரத்தினின்றும்) சரீராந்தரத்தை, எய்தும் - அடையும், போதும் - போதும், அதனை - அச் சரீரத்தை, விட்டு - விடுத்து, ஏகும் - (பர லோகத்திற்கு) செல்லும், போதும் - போதும், போக்க - போக்குதற்கு, அரிது - அரியன, ஆய - ஆன, ஆறு - (மந முதலிய) ஆறு, புலன்களை - இந்திரியங்களையும், கொண்டு - (கிரகித்துக்) கொண்டு, போம் - செல்லுவன், (எ-று).

ஆல் அசை நிலை.

श्रोत्रं चक्षुः स्पर्शनं च रसनं घ्राणमेव च ।
अधिष्ठाय मनश्चायं विषयानुपसेवते ॥ (९)



(இ-ள்.) अयम् - இந்தச் சீவாங்மா, श्रोत्रम् - சுரோத்திரம், चक्षुः - சக்ஷுஸ், स्पर्शनम् - च - துவக்கு, रसनम् - சிங்ஙுவை, घ्राणम् च - கிராணம், मनः - மநம் என்பவற்றை, अधिष्ठाय एव - ஆசிரயித்தே, विषयान् - (சப்தம் முதலிய) விஷயங்களை, उपसेवते - நுகருகின்றது.

उत्क्रामन्तं स्थितं वापि भुंजानं वा गुणान्वितं ।
विमूढा नानुपश्यन्ति पश्यन्ति ज्ञानचक्षुषः ॥ (१०)

(இ-ள்.) उत्क्रामन्तम् - वा - உத்கிரமணஞ் செய்வதும், स्थितम् - वा - (அத் தேகத்தின்கண்ணே) நிலைத்திருப்பதும், भुंजानम् वा - (விஷயங்களை) நுகருவதும், गुण अन्वितम् - अपि - குணத்தோடு பொருந்தியது மாகிய, ஆத்மாவையும், विमूढाः - விமூட புருஷர், अनुपश्यन्ति - न - காண மாட்டார்கள், ज्ञान - चक्षुषः - ஞாந நேத்திரம் உடையவர்கள், पश्यन्ति - (அவ் வாங்மாவை) காண்கின்றார்கள்.

यतन्तो योगिनश्चैनं पश्यन्त्यात्मन्यवस्थितम् ।
यतन्तोऽप्यकृतात्मानो नैनं पश्यन्त्यचेतसः ॥ (११)

(இ-ள்.) यतन्तः - முயற்சி யுடைய, योगिनः च - யோகிகள், आत्मनि - ஆத்மாவினிடத்தில், अवस्थितम् - நிலைத்தவராய், एनम् - (தனது உள்ளத்தின்கண் உள்ள) இந்த ஆத்மாவை, पश्यन्ति - பார்க்கின்றார்கள், यतन्तः - अपि - பிரயத்தநம் பண்ணியும், अकृत - आत्मानः - மலிந அந்தக்கரண முடைய, अचेतसः - அவிவேகிகள், एनम् - இவ் வாங்மாவை, पश्यन्ति न - பார்த்திலர்.

[எப் பிரயோஜநத்தின் பொருட்டு இச் சீவாத்மா இந்திரியங்களையும் கிரகித்துக் கொண்டு செல்கின்றனன் எனின், அப் பிரயோஜநத்தை அருளிச் செய்கின்றார்.]

மின்னே யனைய வுடம்புதனை விடுவ தடைவ தாய் விடயந், தன்னே ரில்லா தான்முனே யார்கின் றனத் தன்மையினை, என்னே காணு ரறியாதா ரறிவா ரியோகத் தாலேதம், முன்னே காண்ப ரிதனியற்கை தெளிநீ யின்னு மொழிவன்கேள். (14)

(இ—ள்.) மின்னே - மின்னை, அனைய - போல, உடம்புதனை - (தோன்றி அழிகின்ற) சரீரத்தை, விடுவது - பரித்தியாகம், அடைவது - கிரகிப்பதும், ஆய் - ஆகிய, தன் - தனக்கு, நேர் - (யா தொன்றும்) இணை, இல்லாதான் - இல்லாத ஜீவாத்மா வானவன், விடயம் - (சப்த ஸ்பரிசாதி) விஷயங்களை, ஆர்கின்றான் - (முன் சொன்ன இந்திரியங்களை ஆசிரய மாகக் கொண்டே) புஜிக்கின்றான், [இந்தப்படி தரிசந யோக்கிய மான ஆத்மாவை அவிவேகிகள் காணார், விவேகிகள் காண்பர் என்னும் பொருளை இப் போது அருளிச் செய்கின்றார்.] அத் தன்மையினை - (தமது புத்தியின் கண் ணுள்ள ஆத்மாவினது) அப்படிப்பட்ட தன்மையினை, அறியாதார் - (அசுத்த அந்தக் கரண முடைய) அவிவேகிகள், காணார் - (பிரயத்தநம் செய்தும்) அறியார், என்னே - இஃது ஆச்சரியம், அறிவார் - (சுத்த அந்தக் கரண முடைய) விவேகிகள், யோகத் தாலே - (தியாநாதி) உபாயங்களாலே, தம் - தமது, முன்னே - எதிரே, காண்பர் - அறியாநிற்பர், இதன் - (முன்னே சொன்ன பிரகார மாக) இவ் வாத்மாவின், இயற்கை - சுபாவத்தை, நீ - நீ, தெளி - அறி, இன்னும் - மேலும், மொழிவன் - கூறுகின்றேன், கேள் - கேள், (எ-று).

தான் ஏ அசை நிலைகள் 'உடம்புதனை' என்பதில் தன் அசை.



यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम् ।
यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥ (१२)

(இ-ள்.) आदित्य - गतम् - இரவியின்கண் உள்ள, यत् - எந்த, तेजः - ஒளி, चन्द्रमसि - மதியின்கண் உள்ள, यत् - च - எந்த, (ஒளி), अग्नौ - அக்கினியில், यत् - எந்த (ஒளி), अखिलम् - சகல, जगत् - உலகத்தினையும், भासयते - பிரகாசிக்குமோ, तत् - அந்த, तेजः - ஒளிகளனைத்தையும், मामकम् - எனது ஸ்வரூபம் என்றே, विद्धि - உணர்தி.

गामाविश्य च भूतानि धारयाम्यहमोजसा ।

(இ-ள்.) च - மற்றும், ओजसा - (எனது) வலியால், गाम् - இப் பூமியையும், आविश्य - மிகத் திடம் செய்து, भूतानि - சர்வ பூதங்களையும், अहम् - (பரமேசுவரனை) நான், धारयामि - தாரணம் பண்ணுவேன்.

இந்தியங் களுக்குங் கண்ணு னிரவிதீ யிந்து வின்பால்,
வந்தெழு கதிரு நானே மாநில மாகி நின்றே,
கந்தியன் றனைய தோளாய் கந்தமே முதலாந் தன்மை,
தந்துரந் தரித்தீ தெல்லாந் தாங்குகின் றேனு நானே. (15)

(இ—ள்.) கந்து - தூண், இயன்ற - இயைந்தாற், அனைய - போன்ற, தோளாய் - புயத்தினை உடைய அருச்சுனா, இந்தியங்களுக்கும் - (சட்சு முதலிய) இந்திரியங்கட்கும், கண் - (மநதுக்கும் வாக்குக்கும் தத் தம் விஷயங்களைப் பிரகாசிப்பிக்கும் சாமர்த்திய ரூபமான) தேஜஸு, நான் - நான் ஆகிறேன், இரவி - (இந்திரியங்களி னிடத்து அநுக்கிரகஞ் செய்யாநிற்கும்) சூரியன், இந்து - சந்திரன், தீயின்பால் - அக்கினி யென்னும் இவைக ளிடத்து,

வந்து - உதித்து, எழு - ஒளிராநிற்கும், கதிரும் - தேஜஸும், நானே - நான் ஆகிறேன், மா நிலம் - பிருதிவி, ஆகி - (தேவதா ரூபம்) ஆகி, நின்று - நின்று, கந்தமே - கந்தம், முதல் ஆம் - முதலிய, தன்மை - குணங்களை, தந்து - (அதற்குத்) தந்து, உரம் - (எனது) பலத்தை, தரித்து - (அதில்) வைத்து (அத்தியந்தம் திடம் ஆக்கி), ஈது - (அதில் உள்ள ஸ்தாவர ஜங்கம ரூப மான) இப் பூதங்கள், எல்லாம் - அனைத்தையும், தாங்குகின்றேனும் - தரிக்கின்றவனும், நானே - (பரமேசுவர னான) நானே யாம், (எ-று).

पुष्णामि चौषधीः सर्वाः सोमो भूत्वा रसात्मकः ॥ (१३)

(இ-ள்) च - அங்ஙனமே, रस आत्मकः - (சர்வ) ரச சுபாவ முடைய, सोमः - சோம, भूत्वा - வடிவ மாய், सर्वाः - சர்வ, ओषधीः - ஓஷதிகளையும், पुष्णामि - புஷ்டி யுடைய தாய்ச் செய்வேன்.

[இதுவு மது.]

முந்து வான்சுவை மூர்த்த மாகிய,
இந்து வாகிநின் றுணவி யாவினும்,
தந்து சேர்சுவை தகவ வற்றிலே,
நந்தி டாவகை வளர்க்கின் றேனுநான். (16)

(இ—ள்.) முந்து - முதன்மை யான, வான் - ஆகாயத்தின் கண்ணே, சுவை - (சர்வ) ரஸங்களின், மூர்த்தம் ஆகிய - ஆகார மான, இந்து - சந்திர ரூபம், ஆகிநின்று - ஆய் நின்று, உணவு - (உண்ணத் தக்கவைக ளான விரீஹீ யவை முதலிய) ஓஷதிகள், யாவினும் - அனைத்திலும், தக - (அவற்றிற்கு) உரியன வாய்,



சேர் - பொருந்துகின்ற, சுவை - இரதங்களை, தந்து - கொடுத்து, அவற்றிலே - அவ் வவ் வோஷதிகளிலே, நந்திடா வகை - (அவ் விரதங்கள்) கெடாதபடிக்கு, வளர்க்கின்றேனும் - விருத்தி செய் கின்றவனும், நான் - (பரமேசுவர னான) நானே யாம், (எ-று).

अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।
प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् ॥ (१४)

(இ-ள்) अहम् - (பரமேசுவர னாகிய) நான், वैश्वानरः - ஜாடராக்கினி, भूत्वा - வடிவ மாய், प्राणिनाम् - (சர்வப்) பிராணிகளினது, देहम् - தேஹத்தை, आश्रितः - ஆசிரயித்துக்கொண்டு, प्राण - अपान - समायुक्तः - பிராண அபானன்களோடுகூடி चतुर्विधम् - (மிகத் தேஜஸை யுடைய தாய்) நால் வகை, अन्नम् - அந்நத்தையும், पचामि - ஜீர்ணிப்பிக்கிறேன்.

[இதுவு மது.]

தின்ப நக்குவ சுவைப்ப வுண்பவாய்,
நன்ப யன்செயு நால்வகை யுண்டியும்,
இன்ப மாம்வகை யாக்கைக டோறுநின்,
றன்ப வங்கியா யறுக்கின் றேனுநான். (17)

(இ—ள்.) அன்ப - அருச்சுநா, தின்ப - தின்பனவும், நக்குவ - நக்குவனவும், சுவைப்ப - சுவைப்பனவும், உண்ப ஆய் - உண்பனவும் ஆய், நன் - நல்ல, பயன் - பயனை, செயும் - செய்யாநின்ற, நால் வகை - நான்கு கூறுபா டுடைய, உண்டியும் - அந்நத்தையும், இன்பம் ஆம் வகை - சுகத்திற்கு ஏது வாகும்படி, ஆக்கைகள் தோறும் - (பிராணிகள்) சரீரங்கள் தோறும், அங்கி ஆய் - ஜாடராக்கினி ரூப மாய், நின்று - (பிராண அபானன்களோடு

